Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 34—No. 11



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ கார்த்திகை 1961 நவம்பர் | இதழ் 11

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா 4

## சமாஜ அறிக்கைகள்

சமாஜ ஆண்டு விழா :—1961 டிசம்பர் 30, 31, 1962 ஜனவரி 1 ஆகிய மூன்று நாட்களில் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 56-ஆம் ஆண்டு விழா பழனியில் நடைபெறும். சைவர் மகாநாட்டிற்கு, மதுரைத் தியாகராஜர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. ஔவை - சு. துரைசாமிப் பிள்ளை அவர்களும், சைவ மங்கையர் மாநாட்டிற்குத் திருமதி. புஷ்பம் நடராஜன் அம்மையார் அவர்களும், சைவ இளைஞர் மாநாட்டிற்குத், திரு. ரா. ப. தணிகை அரசு அவர்களும் தலைமை தாங்குவார்கள். விவரமான நிகழ்ச்சி டிசம்பர் "சித்தாந்தம்" இதழில் வெளிவரும்.

சமாஜச் செயற்குழுக் கூட்டம்: 26-11-61 ஞாயிறு காலை 9-30 மணிக்கு, மயிலாப்பூர்க் கிழக்கு வீதி வணிக வைசிய மண்டப மேல் மாடியில் நடைபெறும். செயற்குழு உறுப்பினர் இதையே அழைப்பாக ஏற்றுக் கொண்டு வருமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

சைவப் புலவர் தேர்வு :—19-11-61 ஞாயிற்றுக்கிழமை கொழும்பு, யாழ்ப்பாணம், சுசீந்திரம், சென்னை ஆகிய இடங்களில் வழக்கம் போல் நடைபெறும்.—ஜி. கலியாணம்.

---

## செய்திச் சுருக்கங்கள்

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம் :—வழக்கம் போல இவ்வாண்டும் கந்தர் சஷ்டி விழாச் சொற்பொழிவுகள் 9-11-61 வியாழக்கிழமை முதல் சிறப்புற நடைபெறுகின்றன. 13-11-61 திங்கட்கிழமை காலை 10 மணியளவில் மகா அபிஷேகமும், மாலை சூரசம்ஹாரமும், மறுநாள் மாலை தேவயானை யம்மையார் திருமணமும் மிகவும் சிறப்புற நிகழவுள்ளன.

குருபூசை விழா :—விழுப்புரத்திற்கு அடுத்த கல்லாலம் பூண்டியில் கவிப்பெருமான் ஒட்டக் கூத்தர் மடாலயத்தில் ஞானதண்டாயுதபாணி பிரதிஷ்டை செய்து, பல ஆண்டுகள் வழிபாடாற்றி வந்த திரு. சிவஞானயோகி முருகானந்த அடிகளாரின் எட்டாம் ஆண்டு குருபூசை விழா, 2-10-61 திங்கட்கிழமையன்று மிகவும் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. அபிஷேக ஆராதனைகளும், ஏழைகளுக்கு அன்னம் பாலிப்பும் நன்கு நிகழ்ந்தன. திரு. கே. எஸ். முத்து

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வானிவையைஉள் நாடு

மலர் 34 | பிலவ கார்த்திகை 1961 நவம்பர் | இதழ் 11

## இலக்கணத்திற் கற்பனைகள்

(முருகவேள்)

(முற்றொடர்ச்சி : மலர் 34, இதழ் 10, பக்கம் 349)

### அன்மொழித்தொகை

ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் பெரிதும் இயைபுண்டு. தம்பொருள் உணர்த்தாது, பிறிதுபொருள் உணர்த்துதல் வகையான் இரண்டும் தம்முள் ஒக்கும். இது பற்றிச் சிலர் இரண்டினையும் இடைத் தெரிவின்றிப் பிறழக் கருதி மயங்குவதும் உண்டு. “அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை மாதர்கொல் மாலும்என் நெஞ்சு” என்னும் திருக்குறளிற் பயின்றுள்ள ‘கனங்குழை’ என்பதனைப் பரிமேலழகர் ஆகுபெயர் என்றனர். சிவஞான முனிவர் ‘இலக்கண விளக்கச் சூறாவளி’யில் அதனை மறுத்து அன்மொழித் தொகை என்பர். “பாயினமேகலை (திருக்கோவையார் : 282) என்னும் சொற்கள் ஒருசொல் நீர்மைப் படுதலின், ஆகுபெயர் எனப்படும்” என்பர் பேராசிரியர். “பெயரெச்சம் நிறுத்த சொல்லும் குறித்து வருகிளவியும் ஆகப் புணர்ந்தது நோக்காமையின் அவ்வாறு உரைத்தார்” எனப் பிரயோக விவேகநூல் (சமாச படலம் : 7) ஆசிரியர், அதனை மறுத்துக் கூறி அன்மொழித் தொகையாகக் கொள்வர். “அருந்திறல் பிரிந்த அயோத்தி போல” (13 : 65) என்னும் சிலப்பதிகார வரியில், ‘அருந்திறல்’ என்பது அன்மொழித்தொகை-யாதபெயர் என்றனர் அடியார்க்கு நல்லார். இவ்வாற்றால் ஆகுபெயர் அன்

மொழித் தொகைகள் பற்றி, அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் பல இருத்தல் உணரலாம்.

எனினும், இரண்டினையும் பொதுவாகப் பின்வருமாறு பகுத்துணர்ந்து கொள்ளலாம். ஆகுபெயர் நியதிப் பெயராகவே வரும். அன்மொழித் தொகையோ, செய்யுள் இயற்றுவோன் ஒருவரை வியப்பு முதலியவற்றால் தன் கூற்றாயும் பிறர் கூற்றாயும் புனைந்துரைப்புழிப் போதரும். ஆகுபெயர் ஒன்றன் பெயரான் அதனோடு இயைபு பற்றிய பிறிதொன்றனை யுணர்த்தி ஒருமொழிக் கண்ணதாக வரும். அன்மொழித் தொகையோ இயைபு வேண்டாது இருமொழியும் தொக்க தொகையாற்றலாற் பிறிதுபொருள் உணர்த்தி இருமொழிக் கண்ணதாக வரும். வேற்றுமை வினை பண்பு உவமை உம்மை என்னும் ஐவகைத் தொகை நிலைத் தொடர்மொழிகளின் புறத்தே, அவையல்லாத பிற மொழிகளாகிய உருபுகள் தொக வருவது அன்மொழித் தொகை எனப்படும் (தொல். சொல்: 418). இதனைச் சுருக்கமாக நன்னூலார் "ஐந்தொகை மொழிமேற் பிற தொகல் அன்மொழி" என்றார். துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள் "சோணசயில மாலை" என்னும் நூலில், 'அன்மொழித் தொகை' என்னும் இவ்விலக்கணக் குறியீட்டினை அழகுறச் சுட்டுகின்றார்.

"எழுபகும் புல்லும் புள்ளும்எவ் விடத்தும்
இருந்திட, நினைத்தஅவ் விடத்தே
விழைவொடு வந்து தோன்றும்நீ இருப்ப,
வினில்மா லிடர்பிறந் துழல்வார்!
மொழிதரு கருணை மலையாலும் பெயர் அன்
மொழிஎரிஇ, வேற்றுமைத் தொகையைத்
தழுவுற நின்று வளர்ந்திடும் சோண
சயிலனே! கயிலைநா யகனே!"

இறைவன் கருணையுடையவன். மலைபோன்ற பெருமை யுடையவன். ஆதலின் அவனைக் 'கருணைமலை' எனச் சான்றோர்கள் போற்றுவர். "மன்னிய திருவருள் மலையே போற்றி" என்று மணிவாசகர் போற்றுதல் காணலாம். சோணசயிலம் என்பது திருவண்ணாமலைக்குப் பெயர். இறைவனே ஒரு காலத்தில் அம்மலையாகத் தோன்றி யருளினான். அதற்கு முன்பெல்லாம் இறைவனைக் குறிக்கும்

'கருணைமலை' என்னும் தொடர், 'கருணையாகிய மலையை யுடையவன்'* எனப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாக வேனும், 'மலைபோலும் கருணை யுடையவன்' என உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாக வேனும், பொருள் கொள்ளக் கிடந்தது. ஆனால் அத்தொடர் 'கருணையை யுடைய மலை' என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகப் பொருள் படுமாறு, இறைவன் சோணசயிலமாகத் தோன்றியருளி னன் எனத் திருவண்ணாமலையின் சிறப்பை விளக்கியருள் கின்றார் சிவப்பிரகாசர். இணையற்ற அவர்தம் இலக்கணப் புலமை எத்துணைக் கற்பனைத்திறன் அமைய இச்செய்யுளிற் புலப்படுத்தப்பட்டுள்ளது!

## வினைத்தொகை

வினைத்தொகை என்பது வடமொழியிற் பெறப் படாமல், தமிழ்மொழிக்கே யுரியனவாக அமைந்த சிறப் பிலக்கணப் பகுதிகளுள் ஒன்று எனச் சிவஞான சுவாமிகள் 'தொல்காப்பியப் பாயிர விருத்தி'யிற் குறிப்பிடுகின்றார். வினைத்தொகையானது இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூவகைக் காலங்களுள் ஒன்றனையும் காட்டாமல், அம் மூன்றற்கும் பொதுவாக நிற்கும் இயல்புடையது. இதனை "வினையின் தொகுதி காலத்தியலும்" என்னும் தொல் காப்பியச் சூத்திரத்தால் உணரலாம். வினை நிலைமொழி யாக நிற்க, வருமொழி பெயராக அமைவது வினைத்தொகை என்பர் உரையாசிரியர். ஆனால் வினைத்தொகைக்கு நிலை மொழி வினையன்று என்பது சேனாவரையர் கருத்து. வட நூலார் தாது என வழங்கும் முதனிலைத் தொழிற் பெய ரையே, வினைத்தொகையின் முதல் மொழியாகக் கோடல் வேண்டும் என்பது சேனாவரையர் கொள்கை. எனவே "காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை" என நன்னூலார் கூறியது சேனாவரையர்க்கு உடன்பாடு அன்று. மெல்லிலை என்னும் தொடர் (மென்மை + இலை)

*இறைவனுக்குரிய பேரும் நாடும் ஊரும் ஆறும் மலையும் முதலியனவாகக் கூறப்பெறும் பொருள்களுள், கருணை என்பது மலையாக உருவகம் செய்து போற்றப்படும். திருவாசகத்திற் கீர்த்தித் திருவகவல், திருத்தசாங்கம் என்பன காண்க.

பண்புத்தொகை போலத் தோன்றுகின்ற தாயினும், அது 'மெல்லுகின்ற இலை' என வெற்றிலையைக் குறித்து வந்த தாகக் கொண்டு, வினைத்தொகை என ஆசிரியர் நச்சினார்க் கினியர் இலக்கணக் குறிப்பு வரைந்துள்ளார் (சிந்தா மணி: 62). இலக்கியங்களைப் பொருளுணர்ந்து சுவைத்தற்கு இலக்கண அறிவு எத்துணை இன்றியமையாதது என்னும் உண்மையினை இவ்வாற்றால் இனிதுணரலாம். மகாவித்து வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இங்ஙனமே ஓர் இடத்தில் அரியதொரு பொருள் விளக்கத்தினைச் செய் தருள்கின்றார்.

"உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்"

எனவரும் பெரியபுராணப் பாடலில், 'மலர்சிலம்படி' என அமைந்துள்ள அழகிய தொடருக்கு, 'மலர் போன்ற சிலம் படி' என ஒருவர் இலக்கண அறிவின்மையாற் பிழைபடப் பொருள் எழுதியிருந்தார். கவிஞர் பெருமான் அதனைக் காண நேர்ந்தது. அப்போது அவர் பின்வருமாறு கூறினார்: 'மலர் சிலம்படி' என்னும் தொடர் வினைத்தொகை. அதனை 'உலகெலாம் மலர் சிலம்படி' என இயைத்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் இயைத்துப் பொருள் கொள்ளுதற்கு மேற்கோள்,

"தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆகி..."

"போற்றி யருளுகநின் ஆதியாம் பாதமலர்..."

எனவரும் திருவாசகப் பகுதிகள் போல்வன ஆகும். 'மலர் போன்ற சிலம்படி' எனப் பொருள் கொள்ளின், அஃது உவமைத்தொகையாம். உவமைத்தொகையாயின், 'மலர்ச் சிலம்பு அடி' என ஒற்று மிகுந்து வரப்பெறும். இதனை யுணர்ந்து கொள்ளும் இலக்கண அறிவுதானும் இல்லாமற் பெரிய புராணத்திற்குச் சிலர் உரை எழுதத் தலைப்பட்டு விடுகின்றனரே! என அவர் மனம் வருந்திக் கூறினராம். அதன் பயனாகவே அவர் சேக்கிழார் பிள்ளைத் தமிழ் நூலில்,

"............
ஏமேவு ஞானசபை இறைவர்தம் மேனியின்
இணங்குற எழுப்பு உலகெலாம்
என்னும்மறை ஆதியாக் கொண்டு,அவர் உயிர்க்கருளும்
இயல்பனைத் தும்தெரித்து,
நாமேவும் அம்முதலொடு ஒன்றவினையுருபுதொக
நான்கனடி யாதிசெய்து
நாற்சீரின் நால்நெறி விளக்கியொளிர் சேக்கிழார்
நற்றமிழ்க் கவிதழையவே"

எனவரும் காப்புச் செய்யுட் பகுதியை அருளிச்செய்தன ராம். இன்னோரனைய செய்திகள், பண்டை நாளில் நம் தமிழகத்திலும் 'இலக்கியத் திறனாய்வு' முறைகள் ஓரள வேனும் இருந்துவந்தன என்பதனைப் புலப்படுத்துவன வாகும் எனக் கொள்ளலாம்.

## வினைக் குறிப்பு

சிவஞான முனிவர் கருத்தின்படி வினைக்குறிப்புச் சொற் களும் தமிழ் மொழிக்கே யுரியனவாகும். கரியன் செய் யன் என்னும் சொற்களில் தொழின்மை தெற்றென விளங்காது குறிப்பிற் பெறப்படுதலின், அவைபோல்வன வெல்லாம் வினைக்குறிப்புச் சொற்கள் எனப்படும். வினைக் குறிப்பு எனினும் தொழிற்குறிப்பு எனினும் ஒன்றே. இவ்விலக்கணக் குறியீட்டினை நிரம்ப அழகிய தேசிகர் ஓரிடத்திற் கற்பனை நயந் தோன்றக் கையாளுகின்றார். நிரம்ப அழகிய தேசிகர் பதினாறும் நூற்றாண்டினர். இவரைத் திருவிளையாடற் புராணம் பாடிய பரஞ்சோதி முனிவரின் உடன்பயின்ற தோழர் என்பர். இவர் ஒரு சிறந்த கவி ஞரும் உரையாசிரியரும் ஆவர். சிவஞான சித்தியார் திருவருட்பயன் என்னும் இருநூல்களுக்கும் உரை இயற் றியதோடு, சேது புராணம் திருப்பரங்கிரிப் புராணம் என் னும் இரு நூல்களையும் இவர் பாடியருளினர். சொற்சுவை பொருட்சுவைகள் துறுமித் திகழும் சேது புராணத்தின் கண், அவர் பாண்டிநாட்டின் பண்பாட்டினைப் பின்வரு மாறு பாடுகின்றார் :

"இல்லம்என் கிளவி அந்நாட்
டிருப்பவர் இசைக்குங் காலை
வெல்லருங் கேள்வி மேலோர்
விதித்திடும் இலக்க ணத்துள்
சொல்லிடும் பெயரே ஏனைத்
தொழிற்குறிப்பு இரண்டி னுள்ளும்
நல்லதோர் பெயரே யன்றி
நவின்றிட நாடி டாரே."

பாண்டி நாட்டில் வறுமையே இல்லை என்பது இப் பாடலின் கருத்து. "இல்லம் என்னும் சொல்லைப் பெயராகவும், வினைக் குறிப்பாகவும் இலக்கண முறைப்படி கொள்ளலாம். பெயராயின் 'வீடு' எனவும், வினைக்குறிப்பாயின் 'இல்லாத நிலையில் உள்ளோம்' எனவும் பொருள்படும். எனவே பாண்டி நாட்டார் அச்சொல்லை வழங்குவதாயின், பெயராக மட்டும் வழங்குவரே யன்றி, வினைக் குறிப்பாக அமைய வழங்கவே மாட்டார்கள். அதற்குக் காரணம், ஆங்குள்ள யாவரும் செல்வம் மிக்கவர்களாகத் திகழ்தலேயாம்" என்பது இதன் பொருள். நாட்டுவளம் பாடுமிடத்தும் தமது நல்லிசைப் புலமைநலம் தோன்ற, நிரம்ப அழகிய தேசிகர் இங்ஙனம் இலக்கணத் துறையிற் கற்பனை யமைத்துப் பாடியருளியமை, நிரம்ப அழகுடைய தாய்க் கற்பார் எவர்க்கும் கழிபெருஞ்சுவை பயப்பதாகும்.

## ஒருவர் எனும் இயற்சொல்

'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' எனப் பாரதியார் பாடியதற்கேற்பத் தமிழ் மொழியானது மிகச் சிறந்த சொல்வளம் பெற்றுத் திகழ்கின்றது. அத்தகைய உயர்ந்த சொற்களில் ஒன்றாகக் குறிப்பிட்டுப் போற்றத் தகுந்த சிறப்புடையது 'ஒருவர்' என்னும் செஞ்சொல் ஆகும். அச்சொல் உயர்திணை முப்பால்களுள் ஒருபாலைத் தனியே விளக்காமல், ஒருவன் ஒருத்தி என்னும் இருபாற்கும் பொதுவாகவரும். மேலும், இச் சொல்லானது ஒரு வகையில் வியக்கத்தக்க அமைப்புடையதாக விளங்குகின்றது எனலாம். இச்சொல் முற்பகுதியால் ஒருமையையும், பிற்பகுதியாற் பன்மையையும் ஒருங்கே இனிதியைத்து உணர்த்துவதாக உள்ளது. இச் சிறப்பியல்பினை வீதந்து வியந்தே,

"ஒருவர் என்பது உயர்இரு பாற்ருய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப"

என நன்னூலார் நவின்றருளினர். சிறந்த இந் நூற்பாவின் திட்பநுட்பம் தெளிந்த சிவஞானசுவாமிகள், இதற்கு வகுத்துள்ள உரை பெரிதும் சுவை பயப்பதாகும்.

"இவ் ஒருவர் என்னும் சொல், பொதுவியலுட் கூறும் உவப்புயர்வு முதலியவற்ருன் வரும் ஒருவர் என்னும் சொல்லன்றித் தன்னியல்பாய் வந்ததாகலின் ஈண்டுக் கூறப்பட்டதென்றுணர்க.

இச் சொல்லின்கட் பகுதிக்கேற்ப இருபாற்றுய் என்றும், விகுதிக்கேற்பப் பன்மை வினைகோளும் என்றும், உயர்திணை முப்பாலுட் பன்மையைப் பின் விதத்தலின் ஆண் பெண் என விதவாது உயர் இருபாற்றுய் என்றும், உயர் என முன் விதத்தலின் உயர்திணைப் பன்மையென விதவாது பன்மை என்றும், ஒருவர் வந்தார் ஒருவரவர் என வினையும் பெயருங் கொள வருவது உவப்புயர்வு முதலியவற்ருன் வருவதாம்; இங்ஙனம் தன்னியல்பாய்வரும் ஒருவர் என்பது வினையும் வினைக் குறிப்புமே கொள்ளும் என்பார் பெயரை யொழித்து வினை கோளும் என்றும், இச்சொல் ஒருமைப் பகுதியோடு பன்மை விகுதி மயங்கிப் பால் வழுவாய் நின்றதேனும் தன்னியல்பாய் மயங்கி நின்றமையின் வழாநிலைபோலும் என்பதூஉம், பன்மை வினை என்றது சொன்மாத்திரையிற் பன்மைவினை யன்றிப் பொருண்மாத்திரையின் ஒருமை வினையாமாதலின் இப் பயனிலையை ஒருவர் என்னும் சொற்கொள்ளுதல் வழூவன்றென்பதூஉம் தோன்றப் பாங்கிற்று என்றும், இங்ஙனமாதல் சான்ருேர்க்கு ஒப்ப முடிந்தது என்பார் என்ப என்றும் கூறினர்."

'ஒருவர்' என்னும் இவ்வரிய சொல்லின் அருமை பெருமைகளை அறிந்துணர்ந்து மகிழக் குமரகுருபர அடிகளார்க்கு ஓர் அரிய வாய்ப்புக்கிடைத்தது. உலகிற் பல மதங்கள் கடவுளை ஆணுக வைத்துப் போற்றுகின்றன. மற்றும் பல மதங்கள் பெண்ணுகக் கருதி வழிபாடு புரிகின்றன. ஆனல் பழந் தமிழர்கள் கடவுளைத் தனியே ஆணுகவோ பெண்ணுகவோ கருதாமல் "அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்றறிக..." எனத் திருக்களிற்றுப்படியார்

என்னும் சித்தாந்த நூல் தெளிவிக்கும் முறையில், ஆண் பெண் என்னும் இருதிறக்கூறும் அமைந்த அம்மையப்பராகக்கொண்டு, பண்டுதொட்டு வழிபட்டு வருகின்றனர். "நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே" என ஐங்குறுநூறு என்னும் சங்கநூல் இவ் வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும். "பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று அவ்வுருத் தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" எனப் புறநானூறு கூறுதலும் காணலாம். கந்தழிப் பொருளின் இயல்பினை உண்மையாற் கண்டுணர்ந்த சான்றோராகிய மாணிக்கவாசகர், அம்மையப்பரின் திருவுருவத்தினையே "தோன்மைக் கோலம்" (கோத்தும்பி: 18) எனத் தொழுது போற்றியருளிச் செய்கின்றார். இத்தகைய அம்மையப்பரின் திருவுருவச் சிறப்பினை விளக்கும் முறையிலும், 'ஒருவர்' என்னும் சொல்லின் அமைப்பினை வியக்கும் முறையிலும், பின்வரும் பாடலைக் குமரகுருபரர் அருளிச்செய்து நம்மனோரை உவப்பித்து உய்விக்கின்றார் :

"அருவருக்கும் உலகவாழ் வடங்க நீத்தோர்க்
கானந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் இயமானன் தீநீர்
மண்ணெனும்எண் வகையுறுப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன் றல்அவ்
வுருவைஃ தொருத்தனென்கோ? ஒருத்தி என்கோ?
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொல்இல தெனின்,யான்மற் றென்சொல் [கேனே?"

இயைபுடைமைபற்றி, அம்மையப்பரின் திருவுருவச் சிறப்பினைக் குறித்துக் குமரகுருபரர் பிறிதோர் இடத்தில் அருளிச்செய்துள்ள வேறொரு சிறந்த பாடலும் ஈண்டு உணர்ந்து கொள்ளுதற்குரியது. அது-தானும் இலக்கணச் செய்தி நுட்பம் மிக்கதொன்றாக மிளிர்கின்றது !

"செவ்வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும்
வெண்மதிச் சென்னியற்கும்
ஒவ்வாத் திருவுரு ஒன்றேஉளது!
அவ்வுரு வினைமற்று

எவ்வாச் சியம்என்று எடுத்திசைப்பேம்?
இன்னருட் புலியூர்ப்
பைவாய்ப் பொறியரவு அல்குல்
எந்தாய் என்று பாடுதுமே!"

"அர்த்தநாரீசுவரன் என்னும் பார்வதி பரமேசுவரன் போலச் சொல்லும் பொருளும் பேதாபேதமாய் வரும் என்பாரும் உளர். காளிதாசனும் 'வாகர்த்தா விவ' என்னும் சுலோகத்தால் அவ்வாறு கூறுவன்" எனவரும் பிரயோக விவேகவுரைப் பகுதியும் (18) பிறவும் ஈண்டு எண்ணி மகிழ்ந்தின்புறற்பாலன.

"சொல்லும் பொருளும் என நட மாடுந் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி யே! நின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும்அவர்க் கேஅழி யாஅரசும்
செல்லும் தவநெறி யும்சிவ லோகமும் சித்திக்குமே"

—அபிராமி அந்தாதி : 28

## ஒரு பொருட் கிளவி

பண்டைக்கால மக்கள் உலகத்துப் பொருள்களை யுணர்ந்துகொண்ட வகைகளும், அவற்றைக் குறிப்பிடுவதற்காக அவர்கள் சொற்களை யுண்டாக்கிய முறைகளும், பிறவுமெல்லாம் பெரிதும் வியப்பை விளைவிப்பன. பொருள்களைக் குறிப்பதற்கு மக்கள் முதன் முதலில் நீளமான சொற்களையே வழங்கினர். அவர்களின் அறிவும் அனுபவமும் வளர வளர அவர்கள் வழங்கிய சொற்கள் சிறியனவாய்க் குறுகத் தலைப்பட்டன. 'மிகப் பழங்காலத்தில் பல கடவுளரை வணங்கும் வழக்கத்தைக் கைக்கொண்டிருந்து நாளடைவில் தம் அறிவும் நாகரிகமும் வளர வளர மக்கள் ஒரு கடவுளைப் போற்றும் கொள்கை யுடையராக மாறியதைப் போன்றதொரு செய்தி இது' என்று அறிஞர்கள் கூறுவர்.*

மக்கள் முதன் முதலில் ஒரு பொருளைக் குறிக்க ஒரு சொல்லையே வழங்கினர். பொருள்களைக் குறிக்கும்

*"Language proceeds from original polysyllabism towards monsyllabism, just as the history of religion does not pass from the belief in one God to the belief in many Gods, but universally from polytheism towards monotheism." —*Otto Jespersen.*

சொற்கள், ஏதேனும் ஒரு காரணம் கருதியே அறிவார்ந்த முறையில் முதன் முதலில் அமைக்கப்பட்டன. அது பற்றியே "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" எனத் தொல்காப்பியர் அருளிச்செய்தனர். பொருள்களைப் பற்றிய அறிவும் அனுபவமும் வளர வளர அவற்றின் பண்பும் பயனும் பிறவும் குறிக்கும் முறையில், ஒரு பொருளுக்கே பலவேறு சொற்கள் உரியனவாக வழங்கத் தலைப்பட்டன. பண்பினை யுணர்ந்த 21 சொற்களும், உயர்வினை யுணர்த்த 17 சொற்களும், வலிவினை யுணர்த்த 34 சொற்களும், அச்சத்தினை யுணர்த்த 28 சொற்களும் தமிழில் வழங்குதலைப் பிங்கலம் திவாகரம் சூடாமணி முதலிய நிகண்டுகளால் அறியலாம். கடலைக் குறிக்கும் பலவேறு சொற்களும், அதனைக் கடத்தற்குப் பயன்படும் கருவியைக் குறிக்கும் புணை தெப்பம் நாவாய் கலம் கப்பல் ஓடம் தோணி அம்பி முதலிய பலவேறு சொற்களும் தமிழில் வழங்கக் காண்டலின், பண்டைத் தமிழர் கடல் கடந்து செல்லவல்ல பேராற்றல் வாய்ந்தவராகப் பிறங்கியமை யுணரலாம் எனக் கூறுவர் அறிஞர். இங்ஙனம் ஒரு பொருளுக்கே எத்துணையோ பல சொற்கள் ஏற்பட்டவாறுபோல, காலடைவில் ஒரு சொல்லுக்கே பலவேறு பொருட்குறிப்புக்கள் ஏற்படலாயின. அதுபற்றியே,

"ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி"

எனத் தொல்காப்பியர் அருளிச் செய்வாராயினர்! இப் பாகுபாடு திரிசொற்களுக்கு மட்டுமேயன்றி, இயற்சொற்களுக்குங்கூட ஏற்புடையது. வெற்பு விலங்கல் விண்டு என்பன மலையையும், கிள்ளை சுகம் தத்தை என்பன கிளியையும் குறிக்கும் ஒருபொருட் கிளவிகள் (Synonyms) எனப்படும். வாரணம் என்பது யானை கோழி சங்கு என்பவற்றையும், எகினம் என்பது அன்னம் கவரிமா புளிமா நாய் என்பவற்றையும், உத்தி என்பது யாழ்ப்பத்தலுறுப்பு கொப்பூழ் தேர்த்தட்டு கான்யாறு முதலியவற்றையும் உணர்த்தும் வேறு பொருட் கிளவிகள் (Homonyms) ஆகும். இங்ஙனம் வருவனவற்றை வடநூலார் முறையே 'பரியாயபதம்' 'நானார்த்தபதம்' என வழங்குவர்.

'நானார்த்த பதம்' எனப்பெறும் பல பொருள் ஒரு சொற்களுள், ஒரு சொல்லே பல பொருள்களைக் குறிக்கும் எனப் பொதுவாகப் பலரும் கருதுவர். ஆனால் "சொற்களின் குடியரசில் பன்மனைவியர் மணமோ அன்றிப் பல கணவர் முயக்கமோ இல்லை. அங்கே ஒரு சொல்லுக்கு ஒரு பொருள், ஒரு பொருளுக்கு ஒரு சொல் என்ற கடுமையான மீற முடியாத சட்டம் உள்ளது"* என அறிஞர் ஒருவர் அழகுறக் குறிப்பிடுகின்றார். "உலகம் என்னும் சொல் இடத்தையும், அதன்கண் வாழும் மக்கட்டொகுதியையும் உணர்த்தும். அதனால் ஒரு சொல் இருபொருட்கண்ணும் சென்றதெனப்படாது, இரு பொருட்கும் உரிமையான் இரண்டு சொல் எனவேபடும். வேறு பொருள் உணர்த்தலின் வேறு சொல்லாதலே துணிவாயினும், பல பொருள் ஒரு சொல் என்புழி, எழுத்தொப்புமைபற்றி ஒரு சொல் என்றார்" என்பர் சேனாவரையர் (தொல். சொல். 57). பாலையும் நீரையும் குறிக்கும் பயம் என்னும் சொல், வடநூலுள் தனித்தனி வெவ்வேறு சொல்லாகவே கொள்ளப்பட்டுள்ளது என்பர் பிரயோக விவேகநூல் (40) ஆசிரியர்.

இவைகள் எங்ஙனமாயினும், குமரகுருபர அடிகளார் தமது பாடல் ஒன்றில் 'ஒருபொருட் கிளவி' 'இருபொருட் கிளவி' என்னும் இலக்கணச் சார்புடைய தொடர்களை இனிதமைத்துப் பாடுகின்றார். மனம் மொழி மெய் என்னும் மூன்றையும் 'திரிகரணம்' என நூல்கள் குறிப்பிடும். இம் மூன்றனையும் நாம் நல்வழியிற் செலுத்தாதொழியின், அவைகள் 'அவகரணங்கள்' ஆகின்றன. குமரகுருபரர் தமது அருட்பெருங் குரவராகிய மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகரை மனமொழி மெய்களால் முறையே நினைந்தும் வாழ்த்தியும் வணங்கியும் வழிபட்டுய்ந்தார். அதனால் அவர்க்குத் திரிகரணங்களும் அவகரணங்கள் ஆகாமல் 'சிவகரணங்கள்' ஆகத் திரிந்து நலம் விளைத்தன. அதுகண்ட குமரகுருபரர் "எனையோர்க்கெல்லாம் மூன்று

---

*"In the commonwealth of words, there is neither polygamy nor polyandry. One word one meaning, one meaning one word, is the rigid and inviolable law"

—*P. B. Ballard.*

என்னும் எண்ணுப்பொருளைத் தரும் ஒருபொருட் கிளவியாக மட்டும் வழங்கும் 'திரிகரணங்கள்' என்னும் தொடர், தம்மளவில் 'சிவமாகத் திரிந்த கரணங்கள்' என வேறொரு பொருளையும் விளைத்து இருபொருட் கிளவியா யிற்று" எனக் கூறி மகிழ்ந்தின்புறுகின்றார்.

"தேசுலாங் கமலைத் திருநகர் புரக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த!
வாக்கும் மனமும் யாக்கையும் ஒன்றாச்
சொற்றரு கரணம் மற்றிவை மூன்றும்
நின்புகழ் நவிற்றியும் நினைத்தும், நின் துணைத்தாள்
அன்புடன் இறைஞ்சியும் இன்பமுற் றனவால்!
அவகர ணங்களே யல்ல! மற்று அம்ம,
சிவகர ணங்களாய்த் திரிந்தன அன்றே? அதனால்,
திரிகர ணங்களென் றுரைசெயும் அப்பெயர்
ஒருபொருட் கிளவி எல்லோர்க்கும்;
இருபொருட் கிளவியாய் இருந்ததுஇன் றெனக்கே!
—பண்டார மும்மணிக்கோவை: 23

## தலைமைபற்றிய வழக்கு

பலதிற மக்கள் சேர்ந்து வாழும் இடம் 'சேரி' 'நாடு' எனப்படும். பலதிற மரஞ் செடி கொடிகள் அடர்ந்து வளரும் இடம் 'தோட்டம்' 'காடு' எனப்படும். சேரி நாடு தோட்டம் காடு என்பன பொதுப் பெயர்கள். இவற்றைக் கிளந்து கூறுதல் வேண்டுமாயின், பலருக்கும் பலவற்றிற்கும் உரிய இவ்விடப் பொதுப் பெயர்களைத் தலைமைபற்றியேனும் பன்மைபற்றியேனும் சிறப்பித்துக் கூறி வழங்குதல் வேண்டும். "பிறரும் வாழ்வார் உளரேனும் பார்ப்பனச் சேரி என்றல் உயர்திணைக்கண் தலைமைபற்றிய வழக்கு. எயினர் நாடு என்பது உயர்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பிறபுல்லும் மரனும் உளவேனும் கமுகந் தோட்டம் என்றல் அஃறிணைக்கண் தலைமைபற்றிய வழக்கு. ஓமைவங்காடு என்பது அஃறிணைக்கண் பன்மைபற்றிய வழக்கு" என்பர் சேனாவரையர். இதனை,

"ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்"

எனவரும் தொல்காப்பியச் சூத்திரம் உணர்த்தும். இதன் கண் குறிப்பிடப்பெற்ற இருவகை வழக்கினுள், தலைமை பற்றிய வழக்கினை மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் ஒரு பாடலிற் குறிப்பிடுகின்றார்.

திருவாவடுதுறை ஆதீனத்தின் தலைவராக விளங்கி யிருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர்மீது பிள்ளைத் தமிழ் இயற்றப் புகும் கவிஞர் பெருமான் அவர்கள், அதன் காப்புப் பருவத்தில் ஒரு புதுமைப் புரட்சியைச் செய்தருள் கின்றார். காப்புப் பருவத்தில் 'கொலைதீர் தெய்வங்களையே காப்பாகப் பாடவேண்டும்' என்பது பாட்டியல் கூறும் இலக்கணம். ஆனால், ஒவ்வொரு தெய்வமும் எவனேனும் ஓர் அசுரனைக் கொலைபுரிந்தே இருத்தலின், அவ்விலக்கண விதியினைப் பின்பற்ற வாய்ப்பின்றிப் புலவர்கள் அதனைப் புறக்கணித்தே, தத்தம் நூல்களிற் பல கடவுளரையும் காப் புரைத்துப் பாடி வந்துள்ளனர். ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர்மீது பிள்ளைத் தமிழ் பாடப்புகும் நம் கவிஞர்பிரான் அவர்களோ, பாட்டியல் கூறும் இலக்கணவிதி பிழையா மற் கொலைதீர் தெய்வங்களையே பாடுதல்வேண்டும் என் னும் குறிக்கோள் உடையவராய், ஆதீனத்தின் அகச் சந்தான - புறச்சந்தான ஆசிரியர்களையே தெய்வங்களாகக் கொண்டு காப்புப் பருவம் பாடுகின்றார். இதனை,

" வழிபடு தேவுளும் கொலைதீர் தெய்வம்
காப்புரைக்க எனவகுத்த ஆன்றோர்
மொழியுணர்ந்தும் அவர்வழிச் சென்றிலர் முன்னோர்!
இரும்புகழ்க் கோமுத்தி எங்கள்
பொழிகருணைச் சின்மயன் அம்பல வாண
தேசிகன்மேற் புகலப் புக்க
கழிமகிழ்யாம் அவ்வழிச் சென்றனம்! சிறக்கும்இப்
பிள்ளைக் கவியும் தானே "

என அவர் தாமே நுதலிப் புகுதல் காணலாம். இஃதெங் ஙனமாயினும், இப்பகுதியில் இவர் மறைஞான சம்பந்த ரைக் குறித்துப் போற்றிப் பாடுங்கால், 'தலைமைபற்றிய வழக்கு' என்னும் இலக்கணத்தை ஒட்டி அரியதொரு விளக்கம் செய்தருள்கின்றார்.

'மறைஞான சம்பந்தர்' என்னும் தொடர், 'மறையுடனும் அதுதரும் ஞானத்துடனும் சம்பந்தம் உடையவர்கள்'

எனப் பொருள்படு மாதலின், சான்றோர்கள் அனைவருக்குமே அது பொதுவாக உரிய காரணப் பெயராகும். ஆயினும், சேற்றிற் பிறப்பன எனைப்பல வுளவெனினும் தாமரைக்கே 'பங்கயம்' என்னும் பெயர் தலைமைபற்றி வழங்குதல்போல, ஏனைய சான்றோர்கள் அனைவருக்குமே பொதுவாக உரிய தொடரெனினும், தலைமை பற்றிய வழக்காற் சிறப்பாகக் கடந்தை மறைஞான சம்பந்தர்க்கே அஃது உரியதாகும் எனப் போற்றிப் புகழ்கின்றார், மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் !

" அரியபுகழ் ஆசிரியர் பலருமுடை யவரே
யாயினும்,பங் கயம்போலத் தலைமைதரு வழக்கால்
பிரியமிகும் மறைஞான சம்பந்தர் எனும்பேர்
பெற்றுவிளங்கிய கடந்தைப் பெரியோனைத் தொழுவாம்.
கரியமலப் பிணிகழலக் கழல்சூட்டி அடியோம்
கன்மனத்தும், வன்மனத்தர் கருதாத கனகப்
பரியமதில் துறைசையகத் தும்கழலா தமர்அம்
பலவாண தேசிகனைக் காத்தருள் கென்றே !"

## தாப்பிசைப் பொருள்கோள்

செய்யுட்களை உள்ளவாறு பொருள் அறிந்துணர்ந்து சுவைத்து மகிழ்வது ஓர் அரும்பெருஞ் செயல். " அணி செய் காவியம் ஆயிரம் கற்கினும் ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்கிலார் " என அதுபற்றியே பாரதியார் பாடுவாராயினர். செய்யுட்களின் பொருள்களை ஓரளவேனும் உணர்ந்து கொள்ளுதற்குப் பயன் படுவனவற்றைப் 'பொருள்கோள் முறைகள்' என்பர் இலக்கணநூலார். அவைகள் பொதுவாக எட்டு வகைப்படும். அவற்றுள் 'தாப்பிசைப் பொருள்கோள்' என்பதும் ஒன்று. இதனை,

" யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்பு கொண்டுகூட்டு
அடிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே "

எனவரும் நன்னூற் சூத்திரத்தால் உணரலாம். இவற்றுள் தாப்பிசை என்பதற்கு ஊசல்போல் இடைநின்று இருமருங்கும் செல்லும்சொல் என்பது பொருள். ஊசலைக் குறிக்கும் தாம்பு எனும் சொல் தாப்பு என வலித்து நின்றது. ஊசலானது இடைநின்று முன்னும் பின்னும்

சென்றுவரும். அதுபோல ஒரு செய்யுளின் நடுவே அமைந்த ஒரு சொல்லானது அதன் முன்னும் பின்னும் உள்ள சொற்களோடு சென்று கூடிப் பொருள் பயப்பது தாப்பிசைப் பொருள்கோள் எனப்படும்.

" உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு "

என்னும் திருக்குறளில் உள்ள 'ஊன்' என்னும் சொல் நடுவே நின்று, அதன் முன்னும் பின்னும் உள்ள 'உண்ணாமை' 'உண்ண' என்னும் சொற்களோடு இயைந்து பொருள்பயந்து நிற்றல் காணலாம்.

'தாப்பிசைப் பொருள்கோள்' என்னும் இவ்விலக்கணக் குறியீட்டினை, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் கற்பனைத்திறன் அமைய, நன்கினிது எடுத்துக் கையாளுகின்றார்.

" சீர்கொண்ட தகுதியில் திரிகுணமும் நிறுவிய
திறத்தடிக் கருமூடிகம்
திகழ்நடுச் செம்மணி யொளிப்பணி முடிச்சிதச்
சிறுபிறை வயக்கிடுதலால்
தார்கொண்ட மலர்செறி கிழக்குமேக் கொடுபகை
தவிர்ந்துதாய் நாப்பணட்டுத்
தாப்பிசைப் பொருள்கோளின் மேவஅமர் கயமுகத்
தம்பிரான் தாள்பரசுவாம்..."

'விநாயகப் பேருமான் அருமையில் எளிய அழகர். இருளை விரும்புவதும், வளைதோண்டிக் கீழ் நோக்கிச் செல்வது மாகிய பெருச்சாளி அவரது திருவடியின்கீழ் உள்ளது. கொடிய நஞ்சையும் விலைமதிப்பரிய மாணிக்கத்தையும் ஒருங்கேயுடைய பாம்பு, அப்பெருமானின் பெருவயிற்றிற் கட்டும் அரைக்கச்சாக அமைந்து விளங்குகின்றது. அவர் தம் திருமுடியின்மேல் வெண்மையும் தண்மையும் தூய்மையும் உடைய பிறைத்திங்கள் ஒளிவீசிப் பிறங்குகின்றது. இவ்வாற்றால் விநாயகப் பெருமான் தம்மையடைந்தவர்கள் தாமதம் இராசதம் சத்துவம் என்னும் முத்திற இயல்புகளுள் எத்திற முடையராயினும், அவர்கள் அனைவர்க்கும் எளிவந்து திருவருள் புரிதலையுணரலாம். அவர் தமது திருமேனியின்மீது அணிந்துள்ள மாலையானது மேல்கீழ் என்னும்

வேறுபாடு கருதாது, திருமுடியினின்று திருவடிகாறும் நீள அமைந்து, திருவயிறுகிய நடுவிடமும் பொருந்தித் தாப்பிசைப் பொருள்கோள் போலத் திகழ்கின்றது. இத்தகைய விநாயகப் பெருமானை நாம் தொழுதுய்வோம்' என்பது இப்பாடலின் பொருள்.

## மொழி மாற்று

பொருள்கோள் வகைகளுள் மொழிமாற்று என்பது ஒன்று என முன்னர்க் கண்டோம். "சுரையாழ அம்மி மிதப்ப - வரையனைய யானைக்கு நீத்து - முயற்கு நிலை என்ப கானக நாடன் சுனை" எனவரும் செய்யுள் இருந்தவாற்றுற் பொருள் இனிது பயவாமையின், 'சுரைமிதப்ப அம்மியாழ யானைக்குநிலை முயற்குநீத்து' என ஏற்றவாறு அச்செய்யுளின் மொழிகளை மாற்றி யமைத்துப் பொருள் கொள்ளும் முறையே மொழிமாற்றுப் பொருள்கோள் எனப்படும். இவ்விலக்கணக் குறியீட்டினைத் துறைமங்கலம் சிவப்பிரகாசர், திருவெங்கைக் கோவைச் செய்யுள் ஒன்றில் அழகுற அமைத்து மகிழ்விக்கின்றார்.

"பழிமாற் றியபுகழ் வெங்கை புரேசர் பனிவரைமேல் [மூர்
மொழிமாற்று எனும்பொருள் கோளின் அல்லாமல் மொழிபிற
சுழிமாற் றியஉந்தி யாய்!வரு வேன்எனச் சொல்லியஅவ்
வழிமாற்ற மும்பிறழ் மோ?பிறழா து மறப்பினுமே !"

தலைவன் தலைவியைப் புணர்ந்து பிரிந்து செல்கின்றான். பிரியுங்கால் இருவர்க்கும் ஆற்றாமை பெரிதாகின்றது. எனினும் தலைவன் தலைவியை நோக்கி 'நாளை நான் வருவேன். இங்கு நின்னைக் காண்பேன்' என ஆறுதல் கூறுகின்றான். அதுபோதும் தலைவி வருந்தித் தயங்கி நிற்கின்றாள். அதுகண்ட தலைவன் 'எங்கள் திருவெங்கை நாட்டில் எவரும் சொன்னசொல் தவறமாட்டார்கள். செய்யுட்களில் மொழிமாற்றுப் பொருள்கோளுக்காக வேண்டுமாயின் மொழியை மாற்றுவரேயன்றி, ஏனைய இடங்களில் ஒருபோதும் மொழியை மாற்றமாட்டார்கள். ஆதலின் நாளை நான் தவறாது வருவேன். நீ சிறிதும் ஐயுறற்க' எனத் தலைவன் தலைவியைத் தெளிவித்துச் செல்வதாக அமைந்தது இச்செய்யுள். (தொடரும்)

# திருவாசகம் - ஆட்டுத்தேவர்

(மு. அருணாசலம்)

திருவாசகம் செத்திலாப்பத்தில் ஐந்தாம் பாடல் "ஆட்டுத் தேவர் தம்விதி ஒழித்து" என்று தொடங்குகிறது. பின் வருவது அப்பாடல் :

ஆட்டுத்தேவர் தம் விதியொழித்து அன்பால்
 ஐயனே என்றுன் அருள்வழி இருப்பேன்
நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே
 நாதனே உனைப் பிரிவுறு அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
 காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தம் தேவர் பிரானே
 திருப்பெருந் துறை மேவிய சிவனே.

இப்பாடலில் ஆட்டுத்தேவர், நாட்டுத்தேவர், சேட்டைத் தேவர் என்று மாணிக்கவாசகர் மூன்று தேவர்களைக் கூறு கிறார். முக்கியமாக, ஆட்டுத்தேவர் என்ற தொடரின் பொருளைத் தெளிவாக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

ஆட்டுத்தேவர் என்ற தொடருக்குப் பலர் பலவாறு பொருள் கொண்டிருக்கிறார்கள்.

சோளங்கிபுரம் - சிவ. அருணகிரி முதலியார் அவர்கள், "ஆட்டுத்தேவர் - ஆட்டப்பட்ட தேவர் ; அவர் மும்மூர்த்தி கள் முதலாயினோர்" என்று கூறுகிறார். கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், "வினைக்கேற்ப என்னை ஆட்டுவிக்கின்ற தேவர்கள்" என்று கூறுகின்றார் ; "விளையாட்டுத் தேவர், பொய்த் தேவர் என்று பொருளுமுண்டு" என்றும் இவர் எழுதுகின்றார். அ. சோமசுந்தரம் செட்டியார் அவர்களின் உரையும் குறிப்பும் இதுவே.

பிள்ளையவர்கள் தம்முடைய உரையில், "சேட்டைத் தேவர் தம் தேவர் பிரானே" என்ற வரியை முதலில் வரு வித்துக் கொண்டு, "எல்லாவற்றையும் தொழிற் படுத்தும் காரணேசுரர்களுக்குத் தலைவரான பெருமானே" என்று

அத் தொடருக்குப் பொருள் எழுதியுள்ளார். ஆனல், தருமபுரம் பதிப்பில்; "ஆட்டுத்தேவர் - தொழிற் படுத்தும் காரணேசுரர்கள்" என்று பிள்ளையவர்களின் உரையை அப்படியே இடம் மாற்றி எழுதிவிட்டு, "சேட்டைத் தேவர்-சிறு குறும்பு செய்கின்ற தேவர்கள்" என்று விளக்கம் எழுதப்பட்டுள்ளது! இதைப் பார்க்கும்போது திருவாசகத்துக்குப் பொருள் கூறலாகாது என்று பழமையாய் வரும் சம்பிரதாயம் மிக்க உண்மையுடையது என்றே கருதவேண்டியிருக்கிறது.

சுந்தரமாணிக்க யோகேசுவரர் உரை, "அசைவை உண்டாக்கிப் பார்வை, மனம், பிராணன் ஆகிய இவைகளுக்கு அந்த அசைவைக் கொடுக்கும் சக்திகளை ஆட்டுத்தேவர் என்று கூறுகின்ருர்" என உரைக்கின்றது.

ஆனல் ஆட்டுத்தேவர் என்ற தொடரின் பொருள் இவ்வளவு சிக்கல் உடையது அன்று. "என்னை ஆட்டி வைக்கின்ற ஐம்புலன்களின் அதிகாரத்தை ஒழித்து" என்று மாணிக்கவாசகர் கூறுகின்ருர் என்பதே என் கருத்து. இப்படிப் பொருள் கொள்ளுவதற்கு உபநிடத வாக்கியமே ஆதாரம்.

இங்கு, தேவர் என்ற சொல்லுக்குப் புலன்கள் என்பது பொருள். தேவ என்ற சொல் வடமொழியில் புலன் என்ற பொருளிலேயே உபநிடதங்களில் வழங்கி வருகிறது. எடுத்துக்காட்டாக, பின்வரும் முண்டகோபநிஷத்து மந்திரங்களைக் கூறலாம்.

ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா
    ந அன்யைர் தேவைஸ் தபஸா கர்மணுவா |
ஞான ப்ரஸாதேந விசுத்த சத்வஸ்
    ததஸ்து தம் பச்யதே நிஷ்கலம் த்யாயமாந: |

என்பது, மூன்றும் முண்டகம் முதல் கண்டம் 8-ஆம் மந்திரம். இதன் பொருளாவது: "அந்த ஆத்மாவைக் கண்ணினல் காணவும், சொற்களால் கூறவும், புலன்களால்

உணரவும், தவத்தினுலும் கர்மாவினுலும் அறியவும் முடியாது. ஞானமும் மனமும் தூய்மை பெற்றுத் தியானிக்க வல்லவன் மட்டுமே நிரவயவமாயிருக்கின்ற அந்த ஆத்மாவை உணர்கிறுன்.'' இங்கு "ந அன்யை: தேவை: க்ருஹ்யதே" என்ற தொடருக்கு, "மற்றப் புலன்களாலும் பற்ற முடியாதது" என்பது பொருளாகும். தேவை : என்ருல் புலன்களால்.

இனி மற்ெருரு மந்திரம் : மூன்ருவது முண்டகம், இரண்டாம் கண்டம் 7-ஆம் மந்திரம் :

கதா:கலா: பஞ்சதச ப்ரதிஷ்டா
தேவாச்ச ஸர்வே ப்ரதிதேவ தாஸு |
கர்மாணி விஞ்ஞான மயச்ச ஆத்மா
பரே வ்யயே ஸர்வ ஏகீ பவந்தி ||

இதன் பொருளாவது: "பதினைந்து கலைகளும் தங்கள் தங்கள் ஆதாரங்களிலே ஒடுங்குகின்றன. எல்லாப் புலன்களும் முறையே தங்கள் தேவதைகளில் ஒடுங்குகின்றன. அவர்களுடைய கர்மங்களும் விஞ்ஞான மயமான ஆத்மாவும் பரம் பொருளில் ஒடுங்குகின்றன." இங்கும் "சர்வே தேவா" என்ற தொடரானது "எல்லாப் புலன்களும்" என்ற பொருளில் வருகின்றது. இந்த இரண்டு மந்திரங்களிலும் தேவ என்ற சப்தம் புலன் என்ற பொருளில் வருவது தெளிவு.

ஆகவே, மாணிக்கவாசகர் ஆண்டவனை நோக்கி, "ஆண்டவனே, என்னை ஆட்டி வைக்கின்ற ஐம்புலன்களின் அதிகார வழியில் நான் செல்லாமல் அன்பினுல் ஐயனே என்று உன் அருள் வழியே இருப்பேனுக" என்று வேண்டுகின்ருர் என்று கொள்வதே பொருத்தமாகும்.

புலன்களைச் சிறப்பித்துத் தேவர் என்று அடிகள் இங்குக் கூறுகிருர். புலன்கள் தம்மை ஆட்கொண்டு வேறு வழியே தாம் செல்ல வொண்ணுதபடித் தடுப்பதால், இவ்வாறு அடிகளே வேறு இடத்திலும் சிறப்பித்துக் கூறுவதை, திருப்பாண்டிப் பதிகத்தில்,

"கூற்றை வென்று ஆங்குஐவர் கோக்களையும்
வென்று இருந்த அழகால்
வீற்றிருந்தான் பெருந்தேவியும் தானும்"

என்ற பாசுரத்தால் அறியலாம்.

அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில்,

"ஓரவொட் டார்ஒன்றை உன்னலொட் டார்மலர் இட்டுனதாள்
சேரவொட் டார்ஐவர்"

என்று கூறுவதும், "கொடிய ஐவர் பாக்கறல் வேண்டும்" எனறும் இந்த மரபுப் பற்றியே. ஐவர் என்ற உயர்திணைப் பன்மை, இழிவு சிறப்பினுல் வந்தது. தேவர் என்ற இடத்தும் இவ்விதமே.

புலன்கள் தம்மை ஆட்டிவைக்கின்ற நிலையை மாணிக்க வாசகர் 'நீத்தல் விண்ணப்பம்' முழுவதிலும் மிகவும் வருந்திக் கூறுகின்றார். மாறுபட்டு அஞ்சு என்னை வஞ்சிப்ப, யான் ஐம்புலன்கள் கொண்டு விடுந்தகையேன், புலனால் அலைப் புண்டேனை, புலனால் அரிப்புண்டு அலந்த வெறுந்தகையேன், புலன்கள் திகைப்பிக்க யானும் திகைத்து, மத்துறுதண் தயிரில் புலன் தீக்கதுவக் கலங்கி, ஐம்புலன்களுக்கு அஞ்சி அழிந்த என்னை—என்பன முதலான எண்ணற்ற தொடர்களைக் காண்க.

இனி, நாட்டுத்தேவர் என்ற தொடரைப் பற்றியும் சில சொற்கள் கூறலாம். உலகிலுள்ள தேவர் போன்ற பெருமையுடையார், நிலத்தேவர், பூசுரர் அதாவது வேதியர்கள் (அந்தணர்), புவனதிபதிகள் என்று பலவாறுகப் பொருள் பண்ணி இருக்கிறார்கள். ஆனல், "நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே" என்றமையால், பிற தேவர்களால் அணுகுதற்கு அரியவன் என்பதே கருத்தாகும். "மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே நாலே நுழைவரியான்", "மாலறியா நான்முகனும் காணுமலை" என்ற திருவாசகத் தொடர்கள் இங்கு நினைவு கூரத்தக்கவை. இவற்றால், நாட்டுத் தேவர் என்பதற்கு "உலகத்தார் தெய்வமென்று கருதி வழிபடுகின்ற மூர்த்திகள்" என்ற பொருளே இயல்பாகக் கொள்ளத்தக்கது. நாடரும் என்றமையால் பிரம

விஷ்ணுக்களால் அறிய முடியாத என்று பொருள் கொள்வதில் தவறொன்றுமில்லை. இங்ஙனம் கூறுவதை விடுத்து, பூதேவராகிய அந்தணர் என்று சொல்வது பொருந்தும் உரையன்று.

எனவே, திருவாசகத்துக்குப் பொருந்தும் உரை கூறுவதற்கு, வடமொழிப் பயிற்சியும் இன்றியமையாதது என்று இங்குப் புலப்படுகின்றது. வேதசிரசு, வேதாந்தம், வேதத்தலை என்றெல்லாம் சித்தாந்த சாஸ்திரங்கள் குறிப்பிடும் உபநிடதப் பயிற்சி இருப்பின், திருவாசகம் பல இடங்களில் இடர்ப்பாடில்லாத நேர்முகமான பொருளை உணர்த்தும் என்பது உறுதி.

---

# அச்சில் விடுபட்ட அப்பர் பாடல்

(ந. ரா. முருகவேள்)

இறைவன் 'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்'. 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்'. 'நினையாதாரை நினையாதவன்.' தயில தாரைபோன்ற அந்தர்முகத் தியானத் திருப்போரே அவனை விடாது அடையத்தக்கவர். அங்ஙனம் இன்றி இடையறவு பட விட்டோரை அப் பரம்பொருளும் விட்டிடும். இடையறாத தியானத்தில் இருந்து அவனை வழிபடுவோர்க்கு இறைவன் பாலும் பழமும் தேனுமாய் உள்ளத்தில் ஊறிக் கலந்து தித்திக்கின்றான். 'நானேயோ தவஞ்செய்தேன். சிவாய நம எனப்பெற்றேன், தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான், தானேவந்து எனது உள்ளம் புகுந்து அடியேற்கு அருள்செய்தான்' என்பர் மாணிக்க வாசகர். இன்னோரன்ன பல கருத்துக்களை யுணர்த்துவதே,

" பன்னி னூறும் பழத்தினு மின்சுவை
யென்னி னூறி யெனக்கே களிதரு
முன்னி லொன்றுமுன் னுவிடில் விட்டிடு
மென்று லீச னிருந்த வியற்கையே "

எனவரும் திருப்பாடல். இத் திருப்பாடல் அப்பரின் பாடலாகக் கருதப்பெறுகின்றது. ஆயினும் பல பதிப்புக்களில் இப் பாடல் காணப்படவில்லை. சிறப்பாக நம் சமாஜப் பதிப்புக்களிலும்கூட, இப்பாடல் விடுபட்டுப் போயிருக்கின்றது.

ஆனல் இத் திருப்பாடலைப் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள், தாம் அரிதின் ஆராய்ந்து எழுதிய சைவ சமய சரபம் என்னும் அருப்பெரும் நூலில் மேற்கோள் காட்டியிருக்கின்றார்கள். 'தகரவித்தை' பற்றிவிளக்குங்கால், இத் திருப்பாடல் ஸ்ரீமத் சுவாமிகளால் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றுள்ளது. அன்றியும், ஸ்ரீமத் சுவாமிகளால் பின்வரும் அடிக்குறிப்பும் பொறிக்கப் பெற்றிருக்கின்றது :

> "இத் தேவாரப் பாசுரம் ஸ்ரீ தாயுமானரால் 'அறிஞருரை' என்னும் பகுதியில் 'உன்னி லொன்று மென்ற வுறுமொழியா லென்னிரயத் தன்னி லுன்னி னன்னெறியைச் சாருநாள் எந்நாளோ?' எனத் தூக்கி யெடுத்தாளப்பட்டுள்ளது. இஃது அச்சிடப்பட்ட பிரதிகள் பலவற்றுள்ளும் விடுபட்டுள்ளது."

இங்ஙனம் ஸ்ரீமத் சுவாமிகளால் 1908-ஆம் ஆண்டின் முதற் பதிப்பிலேயே 'சைவசமய சரபம்' என்னும் நூலில், இத்திருப்பாடல் மேற்கோளாகக் காட்டப்பெற்றிருந்தும், இத் திருப்பாடல் பின்னர் வந்த தேவாரப் பதிப்புக்களிலும் சேர்த்துக் கொள்ளப்படாமலே போயிற்று. இதற்குக் காரணம் 'சைவசமய சரபம்' போன்ற அரும்பெறல் நூல்களைச் சைவப்பேரறிஞர்களே சரிவரப் போற்றிப் பயன்கொண்டிலர் என்பதேயாகும் போலும்! இல்லையேல், பின்வந்த தேவாரப் பதிப்புக்களில் எவ்வகையிலேனும் இத்திருப்பாடல் இடம் பெற்றிருத்தல் கூடும் அன்றோ?

இத் திருநாவுக்கரசர் தேவாரப் பாடலை ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள் என்னும் இருவர் மட்டுமேயன்றி, ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள் அவர்களும் எடுத்தாண்டிருக்கிறார்கள்.

“ எண்டிசை விளங்க இருட்படாம் போக்கி
முண்டகம் மலர்த்தி மூதறிவு அருளும்
மேதினி யுதய மெய்கண்ட தேவ !
கோதில் அமுத குணப்பெருங் குன்ற !
உன்னி னூர்தலும் அகறலும் என்னைகொல் ?
உன்னிற் றுன்னி யுறவிடிற் பெயர்குவை
என்று மதுவே நின்னியல் பெனினே,
வியங்கோ ளாளனு மாகி இயங்கலும்
உண்டெனப் படுவை. எண்டோள் முக்கண்
யாங்கணும் பிரியா தோங்குநின் நிலையின்
யான்வந் தணைந்து மீள்குவன் ஆயின்,
ஆற்றுத்துயர் உற்றோர் அணிநிழல் நசைஇ
வீற்றுவீற் றெழுதா வேண்டலும் வெறுத்தலும்
இன்றச் சாயைக்கு நன்றுமன் இயல்பே.
அனையை யாகுவை நினைவருங் காலை.
இந்நிலை யதனின் எழையேற் கிரங்கி
நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயேல்,
அருள்மா றுகும் பெரும்!அஃ தன்றியும்
நிற்பெற் றவர்க்கும் உற்பவம் உண்டெனும்
சொற்பெறும். அஃதித் தொல்லுல கில்லை.
அவ்வவை யமைவும் சால்பும் மயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே ”

எனவரும் இருபா இருபஃது என்னும் அரிய சைவ சித்தாந்த நூலின் 12-ஆம் பாடலில், “உன்னில் துன்னி உறுவிடில் பெயர்குவை ” எனவரும் ஆறும் வரியில், இத்திருப்பாடல் சுட்டப்பெற்றிருத்தல் காணலாம். இவ்வரி ‘உன்னிற்றுன்னி’ எனப் பதிக்கப்பட்டு ‘உன்னிலுன்னி’ எனப் பாடபேதம் அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளது. இரண்டிற்கும் பொருள் வேறுபாடு பெரிதில்லையாயினும், ‘முன்னோர் மொழி பொருளே அன்றி அவர் மொழியும் பொன்னேபோற் போற்றும்’ கடப்பாட்டின்படி, ‘உன்னிலுன்னி’ என்பதே சரியான பாடம் எனலாம். அல்லாக்கால் ‘உன்னிற்று உன்னி’ எனத் தவறாகப் பிரித்தற்கும் (Metanalysis) அதனில் இட னுளது. மேலும் ஸ்ரீ தாயுமான சுவாமிகளும் ‘உன்னில்

உன்னி' என்றே எடுத்தாண்டுள்ளார். மேற்குறித்த தேவாரப் பாடலினும் இவ்வாறே பயின்றுள்ளது.

இனி, ஒரு சிலர் இவ்விருபா இருபஃதின் ஆறும் அடி இத் திருப்பாடலைத்தான் சுட்டும் என்பது எவ்வாறு ? என வினவுதல்கூடும். உரையாசிரியர்கள் இப் பாடலைச் சுட்டி மேற்கோள் காட்டா தொழிந்தமை, இவ்வையுறவை அவர்களுக்கு விளைவித்தல் இயல்பே. உரையாசிரியர் இத் திருப் பாடலைக் காட்ட மறந்துபோயிருக்கலாம். அல்லது நம்மைப் போலவே அவர்க்கும் இத் திருப்பாடல் அந்நாளிற் கிடைத்த பிரதியில் கிடையாமற் போயிருக்கலாம். அஃதொரு வலிய காரணமாக மாட்டாது. ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள் அம்காக்குத் தேவார திருவாசகத் திருமுறைத் தொடர்களைத் தம் நூல்களில் எடுத்தாளும் இயல்பினர் என்பதை அவர்தம் சிவஞான சித்தியாரிற் பலவிடங்களிற் காணலாம். இவ்விருபா இருபஃதினுள்ளும்,

" இருநிலந் தீநீர் இயமானன் கால்[1] எனும்
பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கு இலாதலின்
வேறே உடனே விளம்பல் வேண்டும்
சீறி யருளல் சிறமை யுடைத்தால்......
காண்பார் யார்கோல் காட்டாக் கால்[2] எனும்
மாண்புரை புணர்த்திலை மன்ற, பாண்டியன்
கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞா னத்தின்
ஆட்பா லவர்க்கருள்[3] என்பதை அறியே "

—இருபா இருபஃது : 2

" உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவர்க் கற்றவன்[4] அல்லவர்க் கல்லவன்
அந்தம் ஆதி இல்லவன்......" —இருபா இருபஃது : 20

எனவரும் பகுதிகளில் அரிய பல தேவாரப் பாடல்களை ஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் எடுத்தாண்டிருத்தல் காண்க. 'இருநிலனாய்த் தீயாகி நீருமாகி' 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' எனவரும் அப்பர் சுவாமிகள் திருப்பாடல்களும், 'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான்புகில் அளவில்லை' 'அற்றவர்க் கற்ற சிவன் உறைகின்ற ஆலவாய் ஆவதும் இதுவே' எனவரும் சம்பந்த

சுவாமிகள் திருப்பாடல்களும் இப்பகுதிகளில் எடுத்தாளப் பெற்றுள்ளன. மேற்குறித்த இருபா இருபஃது, இரண்டாம் பாடலின் 15-ஆம் வரி 'பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கு இல்' என்று பதிக்கப் பெற்றிருப்பது, 'பெருநிலைத் தாண்டகம்' என்று இருத்தலே பொருத்தம். ஈண்டு இறைவனின் திருநடனத்தினை யன்றிச் சிறப்பாக "நின்ற திருத் தாண்டகத்தினை"யே அவ்வரி சுட்டி நிற்றலின் என்பது.

இவ்வாறே ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகளும் ஆங்காங்குத் தேவார திருவாசகத் திருமுறைகளில் இருந்து மேற்கோள்களைச் சுட்டியுள்ளமையினை அவர்தம் நூல்களிற் காணலாம். விரிப்பிற் பெருகும்.

எனவே, இதுகாறும் கூறியவாற்றால் மேற்குறித்த திருப்பாடல் அப்பர் சுவாமிகள் திருப்பாடல் என்பதும், எங்ஙனமோ அச்சில் விடுபட்டுப்போன இத் திருப்பாடலை இனிவரும் தேவாரப் பதிப்புக்களிலேனும் சேர்த்துப் பதிப்பிட்டுப் பயன்கொள்ளுதல், சைவத் தமிழுலகிற்கு இன்றியமையாத கடப்பாடாம் என்பதும் பெறப்படும்.

——

# சமயம்

## இதிகாசங்களும் அவைகளின் காலமும்

(இரா. வாசுதேவ், கோவை)

இதிகாசங்கள் என்பன இந்து சமயத்தின் இரு பெருங் காப்பியங்கள் ஆகும். இந்து சமயத்தில் நான்கு வேதங்களுக்கு அடுத்தாற்போல் விளங்குவன அவ்விரு காப்பியங்களே. அவைகள் 'இராமாயணம்', 'பாரதம்' எனக் கூறத் தேவை இல்லை. காப்பியத்திற்குரிய வடமொழிச் சொல்தான் இதிகாசம் என்பது ஆகும். அதேபோல் தெற்கே தமிழ் நாட்டில் ஐம்பெருங் காப்பியங்கள் இருப்பது யாவரும் அறிந்ததே.

இனி இதிகாசங்களின் காலத்தைப் பற்றி அறிந்து கொள்வோம். இக்காப்பியங்களின் காலம் பொதுவாக இந்து சமயத்தைப் பொறுத்தமட்டில்தான் அறியமுடியும்.

அதற்கு இந்திய சரித்திரத்தில் சரியான காலம் தெளிவாகக் குறிப்பிட்டிருப்பதாகத் தெரியவில்லை. அது எப்படி என்பதை இனி சற்றுக் கவனிப்போம்.

இந்திய வரலாற்றின்படி இந்தியாவில் பழங்குடி மக்கள் யார், அவர்கள் எவ்விதம் வாழ்ந்தனர், எக்காலத்தவர், அதற்குச் சின்னங்கள் இருந்தால் அவைகள் என்ன என்பது கற்றோர் அனைவருக்கும் நினைவிருக்கும். கற்கால மனிதர்களைப் போல் இருந்தோர் கடின வாழ்க்கை நடத்தி அதற்கு உதவிய பாதுகாப்பு ஆயுதங்கள் எல்லாம், இலை போன்ற கூரான ஆயுதங்கள், வேல்போன்ற கற்கள், தீப்பொறிக் கற்கள் என்பவைகளே. அதற்குப் பின்னர் சிந்து சமவெளிப் புதைபொருள் சின்னங்கள், அன்னார் உடைய பண்டைய குடங்கள், பானைகள், எருது, சிவன், சூலாயுதம், விஷ்ணு, வேல் போன்ற மற்ற சின்னங்கள் எல்லாம் பண்டைய காலத்து மத சம்பந்தப்பட்டவைகளாக எடுத்து வைக்கப் பட்டு இருக்கின்றன. தற்சமயத்தில்தான் உண்டி, உடை, உறையுள், இவைகளோடு மதத்தையும் தழுவி வந்தனர். அவர்கள்தான் ஆரியர்களாக இருக்கவேண்டும். பேராசிரியர்கள் கூறுவதுபோல் இவ்வாரியர்களும் இந்தியப் பழங்குடிகள் அல்லாது மத்திய ஆசியா, ஐரோப்பாக் கண்டம் ஆகிய இவைகளில் இருந்து இந்தியாவிற்கு இமயமலையில் வடமேற்குக் கணவாய்கள் வழியாக வந்தவர்கள் ஆகிறார்கள்.

இதிகாசங்களின் காலத்திற்கு முன் வேதகாலம் (Vedic period or age) ஆகும். வேதங்கள் நான்கு என்றும், அவைகள் இருக்கு, யசுர், சாம, அதர்வண வேதங்கள் என்றும் யாவரும் அறிவர். இவைகளை எழுதியவர் வேத ஆசிரியர் என்றும் மற்றும் முழுதும் இறைவனாலேயே ரிஷிகளுக்கும் ஜனங்களுக்கும் போதிக்கப்பட்டது என்றும் அறியவேண்டும். இவைகளில் நாம் அறிவது என்ன? முக்கியமாகப் பஞ்ச பூதங்களாகிய நிலம், நீர், தீ, காற்று, வானம் ஆகியவைகளும், இவைகளை யெல்லாம் மூலமாகக் கொண்ட இயற்கை அதில் இருப்பிடமாகக் கொண்டவைகளைப் பெரிதும் போற்றியும், அதனால் ஏற்படும் பயன்களைத்

துய்த்தற்கும் அவைகளின் எண்ண முடியாத நிலைமைகளைக் கருதி வணங்கியும் வந்ததனையே இவ்வேதங்களில் அறிகிறோம். இருக்கு வேதகாலத்தில் உருத்திரனைத் தொழுதனர் என்றும், அதர்வண வேதகாலத்தில் சைவம் தொடங்கியது என்றும், பலியிடுதல் முறையைக் கையாண்டனர் என்றும் அறியலாம்.

இந்திய சரித்திரத்தைக் கருதின் சிந்து சமவெளிப் புதை பொருளுக்குப் பின்னர் மேலே கூறப்பட்ட இதிகாசங்களின் காலமாகும். இக்காலத்தில் இருபெருங் காப்பியங்களை இயற்றியவர் பெருங் கவிஞர்கள் அல்லது சமய குரவர்கள் ஆதலால் பாரதத்தை விநாயகர் மூலம் வியாசர் எழுதியதும் வடமொழியில் வால்மீகியும் எழுதியது அச்சிறந்த ஆரிய ஆசிரியர்களின் காலத்தைக் குறிப்பிடுகிறது அல்லவா? ஆனால் வரலாற்றின்படி இராமரும், தருமரும் ஆகியோர் அயோத்தி, அஸ்தினபுரம் அவைகளை ஆண்டனர் என்று கூறமுடியாது. அதற்குத் தேதிக் குறிப்புகள் விளக்கிக் கூறச் சான்றுகள் இக்காப்பியங்களில் இல்லை. காப்பிய ஆசிரியர்கள் அவர்களுடைய சமயப்பற்று, இன ஒற்றுமை, கடவுள் பக்தி முதலியன அதிகம் உடையவர்கள் ஆதலாலும், அவர்கள் பெரும் சமயகுரவர்கள் ஆதலாலும் சரித்திரத்தில் சேர்ந்திருக்கிறார்கள் எனத் தெரிகிறது. இவைகள் எல்லாம் கி.மு. 2-ம் நூற்றாண்டிற்குள் ஏற்பட்டிருக்கவேண்டும். இது ஏனெனில் 5-ம் நூற்றாண்டில்தான் புத்தர், அதற்குப் பின் அசோகர் ஆட்சி என்பதும் நாம் அறிகிறோம். மேலே குறிப்பிட்டவைகளின்படி சரித்திரத்திற்குச் சம்பந்தப்பட்ட இதிகாசங்களின் காலம் 2-ம் நூற்றாண்டும், அதற்கு முந்திய காலமும் அதாவது ஏறக்குறைய 1 அல்லது 2 நூற்றாண்டுகளாகத்தான் இருக்கும். ஆனால் சமயத்தைப் பொருத்த மட்டில் அதன் காலங்கள் வரையறுக்க முடியாது. ஏனெனில் மத சம்பந்தப்பட்ட காலங்களில் மானிட அரசர் தேவர்கள், அசுரர்களோடும் ஒன்றுபட்டு வாழ்ந்தார்கள். அவ்வாழ்க்கையானது யுகங்களில் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் என்பது அறியவேண்டும். ஆனால் மத சம்பந்தப்பட்ட

யுகங்கள் ஆறாலும் எல்லாம்வல்ல தேவர்கள் ஆவோர் சரித்திரத்திற்கு ஏற்ற காலக் குறிப்புக்கள், தேதிகள் முதலியவைகள் குறிப்பிடாது சென்றதும், தற்காலத்தோர் அதாவது கலியுக காலத்தவர்களாகிய நாம் அவர்களைப் பற்றித் தெளிவாகவும் குறிப்பாகவும் அறிந்து கற்கும்படி செய்யாது சென்றது ஏன்? காலங்கள் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் (அதாவது 17,21,000 வருஷங்கள், 12,90,000, 8,64,000, 4,3,2000 வருஷங்கள்) என்ற 'மஹாயுகம்' ஆக இருந்தும், கண்ணிமையிலிருந்து வருஷம் காலத்தைப் பிரித்தாலும், எண்களால் குறிப்பிட்டதை இதற்காக நடந்தது என்று ஏன் வரையறையாது சென்றார்கள்? ஒருவேளை தேவர்கள் அசுரர்கள் இட்ட கடும் பெரும் போர்களால் எல்லாம் அழிந்துவிட்டதோ! உதாரணத்திற்கு ஒன்று கூறுவோம்:—இராமாயணத்தில் விசுவாமித்திரர், இராமர், இலக்குமணன் மிதிலையை நோக்கிச் செல்லும்பொழுது இராமர் கால் பட்டதும் கல்லாக இருந்த அகல்யை பெண்ணாக மாறி மஹரிஷி கௌதமரைத் திரும்பி அடைந்தார் என்று கூறப்படுகிறது. இதில் கௌதமர் இந்திரனின் சூழ்ச்சியாலும் களவு நோக்கம் கொண்டதாலும் சொந்த மனைவியைச் சபித்துவிட்டார். அப்பொழுது அறியாது செய்த பிழை தீர்க்கும்படி கேட்டதில் முனிவர் மனைவியின்பால் இரக்கம்கொண்டு "நீ திரேதா யுகத்தில் இராமர் கால் படின் அதனால் கல்லாய் இருக்கும் உன்னிலை பழைய நிலைக்கு மாறிவிடும் என்று கூறிவிட்டார்." இவைகள் எல்லாம் பொதுவாக யுகம் எனவும் இவன், இத்தேதியில், இதனால் இதற்கு என்று குறிப்பாக எதுவும் எடுத்து விளக்க முடியாத நிலையில் சமயக் கதைகள் இருக்க அவைகளுக்கு ஏற்ற சரித்திரக் குறிப்புக்கள் எதுவும் இல்லையாகையாலும் (எதுவும் தெளிவாக இல்லையாகையால்) சமயப் பெருங்காப்பியங்களுக்கும் சரித்திரத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்று ஒரே முடிவாகக் கூறிவிடலாம்.

இதிகாசங்களுள் வித்தியாசம்:—வடக்கே இதிகாசங்களின் காலங்கள் இன்னது என்று சரியாகக் குறிப்பிடாமல்

இருக்க தெற்கே தமிழ்நாட்டுச் சரித்திரத்தில் முதல் நூற்றுண்டு மத்தியிலிருந்து கரிகாலன் I இருந்து அல்லது கி. பி. 119 நூற்றுண்டில் செங்குட்டுவன் காலம் எனத் தெளிவாகக் குறிப்பிட்டதைப் போல் எல்லாம் இருக்கிறது.

சூரிய குலத்து ஆரியர் அரசர்களாக இருந்தனர் என்று காப்பியங்களில் அறிகிறோம். அயோத்தியில் தசரதர், இராமரும் மிதிலையில் ஜனகரும் அரசர்களாக இருந்தும் முனிவர்களின் தவ வலிமை, தேவர்களின் துணை, அசுரர்களின் பகை என்றவாறெல்லாம் வாழ, தமிழர்கள் தெற்கே மானிட அரசர்களாகத் திகழ்ந்து அவர்களின் ஆட்சித் திறமை, படைபலம், வெற்றி, வீரம் எனவே வாழ்ந்தனர். வடவரைப் போல் இதிகாசங்களின்படி கற்பனையில் வருவோரைப் போல் தேவர், அசுரர் என்பவர்களோடுந் தொடர்புற்று வாழ்வு நடத்தவில்லை. மானிடனின் காலம் குறுகியதும், கொஞ்சமும் தான் என்று யாவரும் அறிந்ததே. இந்நாட்டில் சராசரி இந்தியனின் வயது 30 வருஷம்தான். அதுபோல் இல்லாமல் இராமர் 11000 ஆண்டுகள் ஆட்சி புரிதல், இராவணன் 110000 ஆண்டுகள் பிரமனுக்குத் தவம் புரிந்தான் என்று கூறினல் இவைகள் எவ்விதம் சரித்திரத்தில் இடம் பெறும் என்று எண்ணவேண்டியதாகிறது அல்லவா?

இராமர், இராவணன் ஆகியோரின் வீரதீரம், ஆண்மை, பண்பாடு, கலைத்திறமைகளுக்கு எல்லாம் உண்மையில் சரித்திரச் சான்றுகள் இல்லை. அவைகளுக்குக் காப்பியங்கள் ஒன்றே தவிர வேறு இல்லை. அதேபோல் தமிழர் ஆட்சி மிக உன்னத நிலையில் இருந்த காலத்தில் 'குமரிக் கண்டம்' என்ற பெரியது ஒன்று இருந்ததாம். அப்பொழுது கிழக்கே உள்ள திருச்செந்தூர் தற்போது உள்ளதற்கு 800 மைல்களுக்குக் கிழக்கே எட்டியிருந்தது என்று கூறுகின்றனர். அதற்குச் சான்றுகள் உள்ளதோ! அவைகள் எல்லாம் கடலால் கொள்ளப்பட்டது என்று கூறுகின்றனர்.

வரலாற்றின்படி வடக்கே இருந்த ஆரியர் தெற்கே ஆட்சியைப் பலப்படுத்தப்படுத்த அவர்களுடைய மதம், பண்

பாடு இவைகளைத் தினித்தனர் என்பதில் ஐயமில்லை. அதனால் தான் தெற்கேயும் இறைவழிபாடும் கோயில்களில் அங்கும் இங்குமாகச் சிறந்த அரசர்களின் சிலையும் காணப்படுகிறது.

முந்திய யுகங்களிற் கடுந்தவம் புரிந்து தெய்வங்களின் வரங்கள் பெற்று மும்மூர்த்திகளும் அடையாத எல்லா வலிமையும் எல்லாத் துறைகளிலும் அடைந்து உலகில் மறைந்தனர். கடவுளரையும் சோதிக்கும்வரை வாழ்ந்தனர் எனின் இக்கலியுகக் காலத்தில் ஏன் அத்தெய்வத் தன்மை இல்லாமல் போயிற்று? எல்லாம்வல்ல கடவுள்கள் எல்லாம் இக் கலியுகத்தில் எங்கே? யுகங்களாகக் காலங் கழித்தவர்கள் இக்காலத்தவருக்கு வழிகாட்டிகளாக ஏன் முன்வரவில்லை. அன்னார் முன் வந்து அக்காலப் போாற்றல்களினால் அக்காலத்தவரை ஏன் திகழச் செய்யக்கூடாது? அப்பொழுது யுகங்களாக வாழ்ந்தவருக்குக் கிருத்து பிறந்த பின் தற்போது ஓர் ஆயிரம் ஆண்டுகள் தானே பெரிதாகக் கடந்திருக்கிறது. ஏன் இக் குறுகிய காலத்துள் அவ்வாற்றல் வாய்ந்தவர்கள் மேலும் வாழ்ந்து அன்னார் ஆட்சிகளை நீடிக்கக்கூடாது. அது செய்யாதது விந்தையல்லவா?

அந்த அந்தக் காலத்துக் கவிஞர்களின் இச்சையால் காப்பியங்களும் கற்பனையோடு தெய்வீகத் தன்மையைப் பலபடச் சிறப்பித்து மேலோங்கச் செய்தனரே ஒழிய, வேறு எந்த விந்தையான பெரு வாழ்க்கையினராகவும் திகழ்ந்தனர் என்று கூறுதற்கு இல்லை. இதற்குச் சான்றுகள் இதுவே :—

11-ம் நூற்றுண்டில் வாழ்ந்த கம்பர் (கி. பி. 1162—பிரதாபருத்ரன் I, கி. பி. 1155—இராச இராசன் அரசாட்சி) வால்மீகி இராமாயணத்தைத் தமிழ் ஆக்கியதும் இயற்றியதும் யாவரும் அறிந்தது. அதேபோல் பாரதத்தைத் தமிழில் இயற்றிய வில்லிபுத்தூரார், நல்லாப்பிள்ளை, பெருந்தேவனார் ஆகியோர் சிறப்புக்கு அளவு உண்டு.

சேனை :

" பொன்னணி ஓடை யானை
பொருபரி காலாள் மற்றும் "

—திருத்தொண்டர் புராணம்

என்ற 'இரதகஜ துரகபதாதி' தான் அரசர்களுக்குப் படை பலமாக இருந்தது. ஆனல் தேவர் அரக்கர்களின் *படை பலம் மந்திரங்களால் அதிகமாயிற்று எனலாம். அவ்வித மந்திரங்கள், சக்திகள் எல்லாம் இன்று அவர்களைச் சார்ந்தோரிடம் எங்கு சென்றதோ !

மேலே கூறப்பட்டவைகளைச் சற்றுக் கருதினுல் இதிகாசங்களில் எவ்விதம் மந்திரங்களால் எல்லா வினைகளையும் ஆற்றிக் காலமும் மாறியதோ அவ்விதமே காப்பியங்களில் சிறந்தவர்கள் இராமர், தருமர், இராவணன், துரியோதனன் எல்லாரும் கற்பனையாகவே மறைந்தனர். அதனுல் சரித்திரத்திலும் ஏற்ற இடம் உறுதியான அரசர்களாக ஆகவில்லை என்பது வெள்ளிடைமலை.

இதற்குமேல் அறியவேண்டுமானுல் பேராசிரியர்கள், அறிஞர்கள், தத்துவ அறிஞர்களாகத் திகழ்வோரால் ஆராய்ச்சி செய்யப்பட்டதில்தான் எவரும் அறியலாம். அதுவும் அவ்வளவு தெளிவானதாக இருக்கும் என்று நினைப்பதற்கு இல்லை.

இவைகளினுல் என்ன தெரிகிறது என்ருல் அவ்வக் காலத்துக் கவிஞர்களின் புலமை, மொழிப்பற்று, திறமை இவைகள்தான் பெருமையாக நிலைத்து இருந்திருக்கின்றன என்று அறிகிருேம். அவைகளின் கற்பனை, போற்றுகை, தூற்றுதல் எல்லாமே சிறப்புற்றதாக இருந்தால் அவைகள் எஞ்ஞான்றும் நிலைத்திருக்கிறதாய்த் திகழ்கிறது. சென்ற விடம் எல்லாம் கற்ருேரின் சிறப்பு நிலைத்தல்போல் கவிஞரின் போற்றுகைதாம் மன்னர்களின் ஆட்சிகளை மேலோங்கச் செய்கிறது, நிலைக்கவும் செய்கிறது என்று அறிகிருேம்.

இருவேறு காலங்களுக்குள் ஒப்புமை:—இதிகாசங்களின் காலத்தில் ஏற்பட்ட தேவ அசுரர் நிலைமை, நிலையாமை என்பதை 20–ம் நூற்ருண்டில் மேல்நாட்டினர் ஆற்றிவரும் பெரும் ஆராய்ச்சி, கண்டுபிடிப்புகளின் விளைவுகளால் ஏற்படப்போகும் இக்காலத்தவர் நிலைமை நிலையாமையை

*புஷ்பக விமானம், விஷ்ணு சக்கரம் என்பன.

ஒருவாறு ஒக்கும். இன நிலையாமை போல் இதிகாசங்களின் காலத்தில் ஏன் ஏற்பட்டிருக்கக் கூடாது என்ற வினா எழுகிறது அல்லவா? ஆனால் இக்காலத்தவர் மானிடர்கள். அக்காலத்துத் தேவர் அசுரர் நிலைமை, சற்று மேலானதும் தெய்விகத் தன்மையானதாயும் இருப்பதால் ஏன் அன்னார் தற்போது உலகில் சஞ்சரித்துப் பழங்காலச் செல்வாக்கை நிலைநாட்டி அதனை மேலோங்கச் செய்யக்கூடாது? அவ்வாறு ஒன்றும் தற்போது ஏற்பட வாய்ப்பு சிறிதும் கிடையாது. ஆகையால் அச்சம்பவங்களை ஒருவாறு கற்பனை என்று எண்ணித் தேற்றிக்கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் கடந்தவர்கள் ஆகிய கடவுள்கள் அவ்வுகங்களில் வாழ்ந்து மறைந்தாலும் அக்காலத்தையும் கடந்து கலியுகக் காலத்தில் அன்னாருடைய தக்க அடியார்களின் நெறியால் இன்றைய மக்களின் நிலைமையை மாற்றி மேலோங்கச் செய்யக்கூடாது. தத்துவத்தின்படி கடவுள் அவ்வுருவமாகக் கொண்டாலும், பகுத்தறிவு உள்ள மானிடர் (சிறப்பு ஆசிரியர்கள்) அவர்களிலும் தங்களையும், தங்களுடைய இனத்தையும் எஞ்ஞான்றும் உயர்வாகப் போற்றிவரும் ஆரியர்கள் அன்னார் இறைவனின் பத்தாவது அவதாரமாகக் கொள்ளப்படும் ஸ்ரீ இராமருடைய (மக்களுள் தெய்வமாகப் போற்றப்படுபவர்) பிறப்பிற்குப் பின்னவது சரித்திரத்திலே 'கி. பி.' 'கி. மு.' என்பதைப் போல் 'இராமர் பிறந்த பின்', 'இராமர் பிறந்ததற்கு முன்' அதாவது 'இ. பி.' 'இ. மு.' என ஏன் காலக்குறிப்பினைச் சிறப்பிக்காது சென்றனர்?

ஆனால் தற்காலத்தில் தெய்வங்களின் அடியார்களாய் இருந்தாலும் அவர்களிடம் அத்தகைய தவ வலிமை வியப்புறத்தும் ஆற்றல் பலவும் அவ்வளவாக இல்லாது எல்லாரைப் போல, எளியோர்களாய் விளங்கி அவர்களுடைய அறிவுரை அறநெறிகள் பலவற்றிலும் புதிது எதுவும் இல்லையாகையால் எளியோர்களாகவே வாழ்ந்து மறைகின்றனர். இதனைச் சிந்தித்தால் மிகவும் பரிதாபத்திற்கு உடையதாய் தோன்றுகிறது அல்லவா?

(தொடரும்)

சதாசிவ முதலியார் அவர்கள் தலைமையில், வித்துவான் - திரு. முருகசரவணபவனர் "சன்மார்க்க நெறி" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழி வாற்றினார்கள்.

தொடக்க விழா: மாம்பாக்கம் குருகுலக் கிளை அலுவலகம் ஒன்று, 1, முல்லாசாயபு தெரு, சென்னை 1 என்னும் இடத்தில், விஜயதசமி (19-10-61) அன்று தொடங்கப் பெற்றது. குருகுலக் குரவர் அருட்டிரு. அழகரடிகள் பத்து நாட்கள் சென்னையில் நிகழ்த்திய நவராத்திரி அருளுரைகளின் தொடர்பாகச் "சென்னைக் குருகுல மாதர் திருநெறிக் கழகம்" இவ்விழாவை முன்னின்று நடத்தியது. அன்பர்களின் வாழ்த் தொலியுடன் மயிலை திரு. மாசிலாமணி முதலியார் அவர்கள் குருகுலக் கொடியை உயர்த்தி அலுவலகத்தைத் திறந்து வைத்து மனமுருகி வாழ்த்தினர்கள். இதற்கு ஆட்சிக்குழு உறுப்பினர் 32 பேர். ஆடவரும் மாதரும் சரி நிகராக வந்திருந்து விழாவைச் சிறப்பித்தனர். குருகுல மாணவி திருமதி நாகம்மையார் நன்றிகூற, அவர் புதல்வியார் மங்கள வாழ்த்துப் பாட, விழா இனிது நிறைவேறியது.

மெய்கண்ட தேவ நாயனர் திருநாள் :—காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகத்தின் சார்பில் சைவ சந்தான முதற் குரவர் மெய்கண்ட தேவ நாயனர் திருநாள் (5-11-61) ஞாயிற்றுக்கிழமை மாலை மிகச் சிறப்பாக நடைபெற்றது. அறநிலையப் பாதுகாப்புக் கழகக் கமிஷனர், உயர் சைவத் திருவாளர்-எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.எ.,பி.எல். அவர்கள் தலைமையில் வித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார் ஆகிய பல அன்பர்கள் சொற்பொழி வாற்றினர்கள்.

புரசைத் திருநெறிக் கழக 9-ம் திங்கள் வழிபாடு:—19-11-61 ஞாயிறன்று, தொண்டை நாட்டிலுள்ள சிவத் தலங்களில் 24, 25, 26, 27-வது தலங்களாகிய திருமயிலாப்பூர், திருவான்மியூர், திருக்கச்சூர் (ஆலக்கோயில்), திரு இடைச்சுரம் ஆகிய நான்கு தலங்களிலும், மற்றும் திருமயிலாப்பூர் திருவள்ளுவர் ஆலயத்திலும், திருவான்மியூர் - பாம்பன் - குமாரகுருதாச சுவாமிகள் சமாதியிலும், திருப்போரூர் முருகப் பெருமான் ஆலயத்திலும் வழிபாடு நடைபெறும். வழிபாட்டன்பர்கள், அன்று காலை 6-மணிக்குச் சென்னைப் புரசை, வைக்கோற்காரன் தெருவிலுள்ள வேம்படி விநாயகர் கோயிலிலிருந்து பேருந்தூர்தி (பஸ்) மூலம் செல்ல ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

திருவதிகை அப்பர் இல்லம் நன்கொடைகள் :—முன் வெளிவந்த நன்கொடையாளர் பட்டியலுக்குப்பின் பெறப் பட்ட நன்கொடையின் பட்டியல் இங்குத் தரப்படுகிறது. இவ்வரிய சிவப்பணிக்குப் பொருளுதவி செய்த பேரன்பர் அனைவர்க்கும் நன்றி.

| | | ரூ. நபை. |
|---|---|---|
| திரு. தே. பழ. சித. சதாசிவஞ் செட்டியார், கொத்தமங்கலம் | ... | 81 00 |
| ,, ரா. சம்பந்தமூர்த்தி முதலியார் (மஞ்சக்கொல்லை) மூலமாக வசூல் | ... | 130 00 |
| ,, டி. ஜி. அண்ணாமலைச் செட்டியார், திருப்பத்தூர், வடார்க்காடு | ... | 50 00 |
| ,, எஸ். எஸ். அருணாசலம் பிள்ளையவர்கள், கணபதி ஆலை, திருநெல்வேலி | ... | 351 00 |

—ரா. சண்முகசுந்தரன், இயக்குநர். (29-9-61)

## சைவ சித்தாந்த மகா சமாஜ வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| பெரிய புராணம் | ... | 3 00 |
| திருவெம்பாவை – திருப்பள்ளியெழுச்சி - சமாஜப். பொன்விழா வெளியீடு (இரண்டாம் பதிப்பு) ராப்பர் பைண்டு | ... | 1 25 |
| ஷை காலிக்கோ பைண்டு | ... | 1 75 |
| முருகன் மூந்நூல்—உரையுடன் | ... | 0 40 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | ... | 2 00 |
| சைவ சமயச் சொற்பொழிவுகள் | ... | 3 00 |
| கந்தரனுபூதி—யந்திரங்களுடன் கூடிய உரை | ... | 1 25 |
| சமாஜப் பொன்விழா மலர் | ... | 0 50 |
| சிவஞான போதம் (எளிய உரை) | ... | 0 12 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | ... | 0 06 |
| அறப்பயிற்சி மாலை | ... | 0 50 |

கிடைக்குமிடம் : (தபாற்கூலி வேறு)

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
14, வாரன் சாலை, மயிலாப்பூர், சென்னை-4

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.